Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 45 காசு



**அன்பு**

அன்பைவிட மேலானது இந்த உலகில் வேறு எதுவுமில்லை.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**உரிமை**

என் அபிப்பிராயத்தை மறுக்க உங்களுக்கு உரிமை உண்டு. ஆனால் என் அபிப்ராயத்தை வெளியிட எனக்கு உரிமை உண்டு

· தந்தைபெரியார்



மலர்: 7 சென்னை: 7 - 8 - 1983 ஞாயிறு வெளியூர்: 8 - 8 - 1983 திங்கள் இதழ் 288

## இலங்கைத் தமிழர் தலைவர்கள்

# புரட்சித்தலைவருடன் ஆலோசனை

சென்னை, ஆக. 7- வெளிநாடுகளில் வசிக்கும் இலங்கைத் தமிழர் விடுதலை கவுன்சில் உறுப்பினர்கள் 6 பேர் சென்னை வந்து முதல்வர் புரட்சித்தலைவரை இன்று சந்தித்தார்கள். இலங்கைப் பிரச்சினை பற்றி அவர்கள் பேசினார்கள்.

டாக்டர் பஞ்சாட்சர ஞானசேகரன், நெல்லை லிங்கம், சண்முகசுந்தரம் ஆறுமுகம், ஸ்ரீதரன் ஆகிய இலங்கை தமிழர் விடுதலை கவுன்சில் உறுப்பினர்கள், புரட்சித் தலைவரின் இல்லத்திற்கு இன்று பகல் 1.35மணிக்கு வந்தனர். அவர்களுடன் மேலவைக் கொறடா டாக்டர் ஜனார்த்தனமும் வந்திருந்தார்.

இலங்கை தமிழர் விடுதலை கவுன்சில் பிரதிநிதிகற் முதல்வ[illegible]டன் பகல் உணவு சாப்பிட்டனர்.

அவர்களும், புரட்சித் தலைவரும்2மணி நேரம் இலங்கைத் தமிழர் பிரச்சினை குறித்து ஆலோசனை நடத்தினர்.

இலங்கையில் நிராதரவாக உள்ள தமிழர்களுக்கு நிவாரண உதவிகள் உடனடியாக போய்ச் சேர ஏற்பாடு செய்யுமாறு கேட்டுக் கொண்டனர்.

இந்தியாவிலிருந்து அனுப்பப்படும் பொருள்கள் பாதிக்கப்பட்ட தமிழர்களுக்கு கிடைக்கும் படி பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் புரட்சித் தலைவரிடம் வேண்டினர்.

இலங்கையில் பாதிக்கப்பட்டுள்ள தமிழர் வாழும் பகுதிகளைபார்க்கஇந்தியாவிலிருந்து குழு ஒன்றை அனுப்புமாறு பிரதமர் இந்திராவிடம் கூறுமாறும் முதல்வர் புரட்சித் தலைவரிடம் இலங்கைத் தமிழர் விடுதலை கவுன்சில் பிரதிநிதிகள் கேட்டுகொண்டனர்



அமைச்சர் ஆர். எம் வீ ராகவானந்தம் மற்றும் கலைமணி ஆகியோர் மேலவை உறுப்பினர்களாக பதவிஏற்ற போது எடுத்த படம்.

## பெங்களூரில் விறு விறுப்பான ஓட்டுப்பதிவு

பெங்களூர், ஆக. 7— கர்நாடக மாநிலத்தில் பெங்களூர், ஹூப்ளி, மைசூர் ஆகிய மாநகராட்சிகளுக்குத் தேர்தல் நடக்கிறது. இன்று ஓட்டுப் பதிவு நடந்தது.

பெங்களூரில்ஓட்டுப்பதிவு விறுவிறுப்பாக இருந்தது. ஏராளமான பெண்வாக்காளர்கள் ஆர்வத்துடன் வந்துஓட்டளித்தனர்.

## சென்னை புத்தர் கோவிலில் வெடிகுண்டு வீச்சு

சென்னை, ஆக. 7- சென்னை எழும்பூரில் உள்ள மகாபோதி (பவுத்தர்) சங்கத்தில் நேற்று இரவு வெடிகுண்டு வீசப்பட்டதாக தகவல்வந்துள்ளது. இதில் யாருக்கும் காயம் ஏற்படவில்லை. மரங்கள் மட்டும் சேதமுற்றன.

இது குறித்து எழும்பூர் போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள். வெடிமருந்து நிபுணர்களும் வரவழைக்கப்பட்டுள்ளனர்.

## கடமை தவறிய இளநிலை பொறியாளர் சஸ்பெண்ட்

சென்னை, ஆக. 7— தமிழ்நாடு வீட்டுவசதி வாரியத் தலைவர் ஏ. செல்லையா நேற்று காலை சென்னை கருணாநிதி நகரில் திடீர் சோதனை நடத்தினார்.

பராமரிப்பு பிரிவில்பணி புரியும் இளநிலைப் பொறியாளர் ஐயப்பன் தனது கடமையில் இருந்து தவறியது அப்போது கண்டுபிடிக்கப்பட்டது. ஐயப்பன் தற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளார்.

தி. மு. க. காலிகளால் தாக்கப்பட்ட

## நாஞ்சில் வின்சென்ட், கதிரேசன் வீடு திரும்பினர்

சென்னை, ஆக 7— தி. மு. க. வன்முறையாளர்களால் தாக்கப்பட்டு தாம்பரம் அரசினர் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்த சட்ட மன்ற கழக உறுப்பினர் நாஞ்சில் வின்சென்ட்டும் முதல்வர் புரட்சித் தலைவரின் டிரைவர் கதிரேசனும் இன்று வீடு திரும்பினர்.

அவர்கள் 15 தினங்கள் மருத்துவ மனையில் சிகிச்சை பெற்றனர்.

இரண்டு வாரங்களுக்கு முன்னர் முதல்வர் புரட்சித் தலைவர் ராமாவரம் தோட்டத்திலிருந்துகாரில் வரும்போது அவருடைய காரைதி.மு.க. வன்முறையாளர்கள் தாக்கியது நினைவிருக்கலாம் இந்தத் தாக்குதலில் நாஞ்சில் வின்சென்ட்டும் டிரைவர் கதிரேசனும் படுகாயம் அடைந்தனர்.

இலங்கை தமிழர் நலனுக்கு உதவ

## நாவலர் ரூ. 1,500 நன்கொடை

சென்னை, ஆக. 7— இலங்கைத்தமிழர் நலனுக்கு உதவ தாராளமாக நிதியுதவியளிக்க வேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் விடுத்த வேண்டுகோளை யொட்டி ஏராளமான நன்கொடைகள் குவிகின்றன அல்லவா?

நிதியமைச்சர் டாக்டர் நாவலர் இலங்கைத் தமிழர்க்குதவ 1500 ரூபாய் நன்கொடை அளித்துள்ளார். முதல்வர் புரட்சித் தலைவரிடம் இந்த நிதியை டாக்டர் நாவலர் வழங்கினார்.

## கொரியாவில் யுத்தம்

சியோல், ஆக. 7— தென் கொரியாவுக்கும் வடகொரியா நாட்டிற்கும் இடையே போர் மூண்டுள்ளது. தென் கொரியா மீது வடகொரியாவிமானம் பறந்து சென்று இன்று தாக்குதல் நடத்தியுள்ளது.

விமானக்குண்டு வீச்சுகளை சமாளிக்க பாதுகாப்பு முகாம்களுக்கு சல்லும்படி தென்கொரியா ரேடியோ தனது நாட்டு மக்களைக் கேட்டுக் கொண்டுள்ளது.



இலங்கைத் தமிழர் படுகொலை:

## நடிகர் - நடிகையர் கண்டன ஊர்வலம்

சென்னை, ஆக. 7— இலங்கையில் சிங்கள வெறியர்களால் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதைக் கண்டித்து தென்னிந்திய நடிகர் சங்கம் சார்பாக கண்டன ஊர்வலம் நடத்தப்பட்டது. தென்னிந்திய நடிகர் சங்கத்தலைவர் எஸ்.எஸ்.ஆர். எம்எல்ஏ, தலைமையில் நடந்த இந்தக் கண்டன ஊர்வலத்தில் நடிகர்கள் சிவாஜிகணேசன், கமலகாசன், வி. கே. ராமசாமி, மேஜர் சுந்தரராஜன், சிவகுமார், ஐசரி வேலன், பிரபு, ராஜேஷ், ராஜூவ் சுரேஷ், தியாகராசன், நாகேஷ், சரத்பாபு, தேங்காய் சீனிவாசன், எஸ். வி. சேகர், ஒய். ஜி மகேந்திரன், நடிகைகள் பூர்ணிமா ஜெயராம் சுகாசினி, ஸ்ரீபிரியா, சிலுக்கு, ஜெயசித்ரா, சந்திரகாந்தா, காந்திமதி உள்ளிட்ட பல நடிகர் நடிகையர் பங்கேற்றனர்.

சரியாக காலை 9 மணிக்கு நடிகர் சங்கக் கட்டிடத்திலிருந்து துவங்கிய இந்த ஊர்வலம் இலங்கைத் தூதுவரகத்தை 11 மணி அளவில் அடைந்தது. அங்கு எஸ். எஸ். ஆர்., சிவாஜி, மேஜர் சுந்தரராஜன் ஆகியோர் இலங்கைத் தமிழர் படுகொலையை கண்டித்து மனு கொடுத்தனர்.



பாதிக்கப்பட்ட இலங்கைத் தமிழர்கள்

## நட்டஈடு பெற மத்திய அரசு முயலவேண்டும்: சர்வகட்சி தீர்மானம்

சென்னை, ஆக. 7- இலங்கையில் பாதிக்கப்பட்ட தமிழர்களுக்கு இலங்கை அரசிடமிருந்து நட்டஈடு பெற்றுத்தர மத்திய அரசு முயற்சிக்க வேண்டும் என்று அனைத்துக்கட்சி கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

சென்னையில் முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் நடந்த அனைத்துக் கட்சித்தலைவர்கள் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நிருபர்களுக்கு படித்தார்.

தீர்மான விவரம் வருமாறு:—

5-8-83 அன்று தமிழ் நாட்டில் எந்தவித அசம்பாவிதமும் ஏற்படாமல் தடுக்கும் பொருட்டு அன்று காலை 6 மணியிலிருந்து இரவு 8 மணி வரையில் ரயில்களையெல்லாம் ஓடாமல் நிறுத்தி வைக்க வேண்டும் என்று தமிழக அரசு விடுத்த வேண்டுகோளை ஏற்று பிரதமர் இந்திரா காந்தி ரயில்வே துறையினருக்கு கட்டளையிட்டு ரயில்களை எல்லாம் நிறுத்தி வைத்ததற்காக இந்த கூட்டம் பிரதமருக்கு தன் நன்றியை தெரிவித்துக் கொள்வதோடு ஆதரவு அளித்த பொது மக்களுக்கும் பாராட்டுதலைத்தெரிவித்துக் கொள்கிறது

### தாராள நிதி வழங்குவீர்

(2)இலங்கையில்ஏற்பட்ட வன்முறை கலவரங்கள் காரணமாக வீடு இழந்து சொத்துசுதந்திரம் இழந்து வசதி வாய்ப்பு இழந்து, உணவு, உடை, உறையுள் இன்றி தவிக்கும் மக்களுக்கு உதவியாக அமையும் வகையில் பெரும் அளவில் நன்கொடையாக உணவு, உடை, மருந்து போன்ற பண்டங்கள் ஆகியவற்றைதாராளமாக வழங்குமாறும், நிதிகளை கூடுமான வரையில் காசோலை மூலமாக அரசிடம் அளிக்குமாறும் அனைத்துத் துறைகளை சேர்ந்த பொதுமக்கள் அனைவரையும் இக்கூட்டம் கேட்டுக் கொள்கிறது.

அத்துடன் ஊதியம் பெறும் ஊழியர்கள். குறைந்த அளவு ஒரு நாள் ஊதியத்தையாவது அவரவர் நிறுவனத்தின் மூலம் அளிக்க முன் வருமாறு இக் கூட்டம் வேண்டிக் கேட்டுக்கொள்கிறது.

நன்கொடை திரட்டுவதற்கு அனைத்துக் கட்சிகளின் தலைவர்கள் அடங்கிய குழு ஒன்றினை மாநில அளவில் அமைப்பது என்றும் அக்குழு மாவட்ட அளவில் குழுக்

(2 ம் பக்கம் பார்க்க)

## சர்வகட்சி தீர்மானம்...

(முதல் பக்க தொடர்ச்சி)

களை அமைப்பது என்றும் இக்கூட்டம் முடிவு செய்கிறது.

(3) இலங்கைவன்முறைக் கலவரம் காரணமாக வீடுகள் வியாபார கூடங்கள் பணிமனைகள், தொழிற்சாலைகள் போன்ற சொத்துக்களை இழந்து தவித்திடும் மக்களுக்கு நியாயமான நஷ்ட ஈடு தொகைகளை அளிக்கவும் புனர் வாழ்வு ஏற்படுத்தவும் இலங்கை அரசு முன் வரவேண்டும் என்ற கருத்தை இந்திய அரசு ஏற்ற முறையில் வலியுறுத்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று இந்தக்கூட்டம் இந்திய அரசை கேட்டுக் கொள்கிறது.

(4) இலங்கையில்இருந்து அகதிகளாக ஓடிவந்து இந்தியாவில் அடைக்கலம் புகும் ஆதரவற்றவர்களுக்கு தக்க பாதுகாப்பும், வசதியும் ஏற்படுத்தி தருவதற்கான ஏற்பாடுகளை செய்ய இந்திய அரசு முன்வர வேண்டும் என்று கூறிக் கொள்வதோடு அப்படிப்பட்ட முயற்சிகளுக்கு தமிழக அரசும் உறுதுணையாக இருந்துஒத்துழைப்பு நல்கி ஆவன செய்ய வேண்டும் என்று தமிழக அரசை இக்கூட்டம் கேட்டுக் கொள்கிறது.

### கண்டன கூட்டம்

(5) இலங்கைவாழ்தமிழர்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைக் கண்டிக்கவும்அவர்களுக்கு முழு பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்று உரியவர்களைக் கேட்டுக் கொள்ளவும் அனைத்துக் கட்சிகளின் சார்பில் 7—8—83-ல் நடத்தப்பட இருந்த கண்டன பொதுக் கூட்டத்தை 10-8-83 புதன்கிழமை மாலை சென்னையிலும் மாவட்ட தலைநகரங்களிலும் நடத்துவதுஎன்றும்அந்தக் கூட்டங்களில் அனைத்துக் கட்சிகளையும் சார்ந்த தலைவர்கள் கலந்து கொள்வது என்றும் இக்கூட்டம் முடிவு செய்துள்ளது.

மேற்கண்டவாறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டதாக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தெரிவித்தார்.

பின்னர் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நிருபர்களின் கேள்விக்கு பதிலளித்தார்.

### நெடுமாறனுக்கு அனைத்து கட்சிகள் வேண்டுகோள்

கேள்வி: இலங்கை தமிழர் படுகொலையை கண்டித்து இலங்கையை நோக்கி 5 ஆயிரம் தியாக தொண்டர்களுடன் படகில் போகும் முயற்சியில் தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் கட்சித் தலைவர் நெடுமாறன் ஈடுபட்டுள்ளாரே? அதுபற்றி சர்வகட்சித் தலைவர்கள் கூட்டத்தில் என்ன முடிவு எடுக்கப் பட்டது?

பதில்: நெடுமாறன் அந்த படகில் போகும் முயற்சியில் ஈடுபட வேண்டாம் என்று அனைத்துக்கட்சி சார்பில் தெரிவிக்கப்பட்டது.

தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் கட்சி சார்பில் இந்த கூட்டத்தில் கலந்து கொண்ட பிரதிநிதி இங்கு கூறுகையில் அனைத்துக் கட்சித் தலைவர்கள் இது பற்றி தெரிவித்த உணர்ச்சிகளை நெடுமாறனிடம் எடுத்துச் சொல்லி தக்க முடிவுகளை அவர் எடுக்க ஏற்பாடு செய்வதாக கூறினார்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

இந்த அனைத்துக்கட்சி கூட்டத்திற்கு தி. மு. க. முஸ்லிம்லீக், வீரமணி திராவிடர்கழகம் வரவில்லை.



## இது குட்டை அல்ல; கங்கை நதி!

-: வலம்புரிஜான் :-

குட்டையாக இருந்தால் குழம்பிய பிறகு மீன் பிடிக்கலாம்; சிலவேளை குழப்பியேகூட பிடிக்கலாம். புரட்சித்தலைவரின் புனித சேனை வற்றாத ஜீவநதி, வளங்கொழிக்கும் கங்கை நதி. நதியைக் குழப்பி நண்டு பிடிக்க நினைக்கிற கருணாநிதியாரின் அறிவீனத்தை நினைத்தால் அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை.

நான் பேசியதாக 'தினத்தந்தி' நாளிதழில் இரண்டொரு தினங்களுக்கு முன்னால் ஒரு செய்தி வெளிவந்தது.

அதில்,

"தூர நாடுகளில் விடுதலை இயக்கங்களின் துயர் துடைக்கிற மத்திய அரசு, சிங்கள வேர் புழு சிறுகிறபோது வேடிக்கை பார்க்கலாமா? இந்திய ராணுவத்தை அனுப்பத் தவறுகிற ஒவ்வொரு நிமிடமும் இந்திய ஒற்றுமைக்கு மத்திய அரசு உலை வைக்கிறது. இறுதியாக எரியப்போவது அசோக வனமில்லை! அசோக சக்கரம் என்கிற வாசகம் காணப்படுகிறது.

இதை வைத்துக் கொண்டு உணர்ச்சியுள்ள தம்பி என்று என்னை உச்சிமுகர்ந்து எழுதுவது போல எழுத்திலே முதுகிலே குத்துகிற காரியத்தைக் கருணாநிதியார் கச்சிதமாகவே செய்திருக்கிறார்.

முன்பு ஒருமுறை இப்படியும் சில மனிதர்கள் என்கிற முரசொலி கட்டுரையிலே கூட என்னைப் பாராட்டுவது போல பாராட்டிவிட்டு எனக்கு படுகுழி தோண்டி வைத்திருந்தார். இப்போதும் தனது கைவரிசைகளைக் கச்சிதமாகக் காட்டுகிறார்.

புரட்சித்தலைவரின் புனிதச் சேனையில் படைவீரர்களாகப் பணியாற்றுகிற என்னைப் போன்றோர் மாத்திரமே உணர்ச்சி படைத்தவர்கள் என்பதாக எழுதி எங்கள் உயிரினும் இனிய உத்தமத்தலைவர் மீது பழி போடப்பார்க்கிறார். இலங்கைப் பிரச்சினையில் உணர்ச்சிக் கடலாகிவிட்ட புரட்சித்தலைவரின் உள்ளத்து எழுச்சி வெள்ளம் ஓடிவருகிற வாய்க்கால்களே நாங்கள் அனைவரும். அவர் வேள்வி நெருப்பென்றால் நாங்கள் அந்த வெளிச்சத்தை உமிழுகிறசின்ன சின்ன அகல்கள்.

எங்களில் எவரும் அவர் காட்டிய பாதையில் இறுதி மூச்சு இருக்கிற வரையில் நடைபோடுகிறவர்களே தவிர அவரது கால் நகத்தின் கண் அசைவிற்கும் கனவிலும் எதிராகப் போகிறவர்கள் அல்ல.

'இறுதியாக எரியப்போவது அசோகச் சக்கரம்' என்று சொன்னதே கூட அசோகச் சக்கரம் கருணையின் சின்னமாக காலந்தோறும் விளங்குகிறது. அமைதியாகத் தீர்க்கப்பட வேண்டிய இலங்கைப் பிரச்சினை வன்முறை வழியிலே தீர்க்கப்பட்டு விடக்கூடாதே என்கிற ஆதங்கத்திலும், உண்மையான நல்லெண்ணத்திலும் சொல்லப்பட்டது.

கருணாநிதியாரின் கட்டுரையிலிருந்து அவரது மூன்று உள்நோக்கங்கள் தெளிவாகின்றன.

ஒன்று: புரட்சித்தலைவர் என்மீது கொண்டிருக்கிற மாற்றமில்லாத அன்பில் நஞ்சு கலப்பது.

இரண்டு: எனது கழகத்தவர்களிடம் என்மீது தவறான கருத்தை வேண்டுமென்று தெரிந்தே உருவாக்குவது

மூன்று: 'அசோகச் சக்கரத்தை' என்று பேசிவிட்டதாலேயே ஏதோ என்போன்றோர் தேச ஒருமைப்பாட்டிற்கே உலைவைக்கிறவர்கள் என்பதுபோலப் பழிசுமத்துவது.

பரப்பிவிடப்பட்ட இந்தத் தவறான உள்நோக்கமுடைய மூன்று கருத்துக்களுக்காகவும் அவர்மீது வழக்குத் தொடருவேன் என்பதையும், எங்களது கூடாரத்தில் சலசலப்பை உருவாக்குகிற அவரது எந்த முயற்சியும் என்றைக்கும் பலிக்காது என்பதையும், என்னைப்போன்றோர் என்றைக்கும் புரட்சித் தலைவரின் சுட்டு விரல் அசைவிற்குக் கட்டுப்பட்டவர்கள் என்பதையும் தெரிவிக்கிறேன்.

## துப்பாக்கி-வெடிகுண்டு வைத்திருந்தால் மரண தண்டனை

### இலங்கையில் பயங்கர கெடுபிடி

**கொழும்பு, ஆக. 7- இலங்கையில் யாராவது அனுமதியின்றி துப்பாக்கிகள், வெடிகுண்டுகளை வைத்திருந்தால் அல்லது பயன்படுத்தினால் அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்படும் என்று இலங்கை அரசு அறிவித்துள்ளது**

இலங்கை தமிழர்களை சிங்கள வெறியர்களும், ராணுவமும் படுகொலை செய்தது தெரிந்ததே.

இதையொட்டி இலங்கை அரசு தற்போது ஒரு உத்தரவை பிறப்பித்துள்ளது.

அனுமதியின்றி யாராவது துப்பாக்கி அல்லது வெடிகுண்டுகளை வைத்திருந்தாலோ அல்லது பயன்படுத்தினாலோ அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கபடும் என்று இலங்கை அரசு உத்தரவு பிறப்பித்துள்ளதாக இலங்கைஅரசு தகவல்கள் கூறுகின்றன.

கலவரங்களை தொடர்ந்து சமூகவிரோதிகளை ஒடுக்குவதற்காக இந்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளதாகஇலங்கை அரசு தெரிவித்துள்ளது.

இதற்கிடையில்இலங்கை ராணுவத்திற்கு இலங்கை ஜனாதிபதி ஒரு உத்தரவு பிறப்பித்துள்ளார். கொலை, கொள்ளை சம்பவங்கள் தொடர்பாக கட்சி உறுப்பினர்கள் கைது செய்யப்பட்டால் அவர்கள்சார்பாகஅரசியல் தலையீடு எதையும் தாம் சகித்துக்கொள்ளப் போவதில்லை என்று ஆளுங் கட்சி கூட்டத்தில் பேசுகையில் இலங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனே கூறியதாக தகவலறிந்த வட்டாரங்கள் கூறின.

இந்த சட்ட நடவடிக்கையிலிருந்து யாரும் தப்ப முடியாது என்று அவர் கூறியதாகவும் அந்த தகவல்கள் தெரிவித்தன.

இலங்கைத் தமிழர்களுக்கு ஆதரவாக

## அர்த்தால் நடத்திய கழகஅரசுக்குஈழத்தமிழர் தலைவர்கள் நன்றி

**சென்னை, ஆக. 7- இலங்கைத் தமிழர்களுக்கு ஆதரவாக தமிழ்நாட்டில் அர்த்தால் நடத்திய கழக அரசுக்கு ஈழத்தமிழர் தலைவர்கள் நன்றி தெரிவித்தனர்.**

வெளிநாடுகளில் இலங்கை தமிழர் தலைவர்கள் பலர் வசித்து வருகின்றனர். அவர்களில் தமிழீழ விடுதலை முன்னணி குழுவைச் சேர்ந்த 9 பேர் சென்னை வந்துள்ளனர்.

இலங்கை தமிழர்கள் பிரச்னை தொடர்பாக அவர்கள்பிரதமர்இந்திராவையும் மத்திய அமைச்சர்களையும் நாடாளுமன்ற உறுப்பினர்களையும் சந்தித்துப்பேசியுள்ளனர்.

சில மாதங்களாக தமிழகத்தில் இருக்கும் தமிழீழ விடுதலை முன்னணி பொதுச் செயலாளர் எம். கே. ஈழவேந்தன், உலகத் தமிழீழ விடுதலை முன்னணி கவுன்சிலைச் சேர்ந்தவர்களான அமெரிக்காவில் வாழும் டி. ஸ்ரீதரன், டாக்டர் வின்ஸ்டன் பஞ்சாட்சரம், டாக்டர் கே. சண்முகசுந்தரம் இங்கிலாந்தைச் சேர்ந்த டாக்டர் நவரத்தினம் நியூசிலாந்தைசேர்ந்த நெல்லை லிங்கம் ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த ஞானகரன் மற்றும் துரைசிங்கம் ஆகியோர் தற்போது சென்னை வந்துள்ளனர்.

நிருபர்களிடம் பேசுகையில் அவர்கள் கூறியதாவது:-

இங்கிலாந்தில் 20 ஆயிரம், அமெரிக்காவில் 5ஆயிரம், ஜெர்மனி, பிரான்ஸ், இத்தாலி ஆகிய இடங்களில் தலா 6 ஆயிரம் இலங்கைத் தமிழர்கள் இருக்கிறார்கள்.

நாங்கள் வாழும் எல்லா இடங்களிலும் தமிழர்சங்கங்களை வைத்துக்கொண்டு இருக்கிறோம். எல்லா சங்கங்களும் ஒருங்கிணைந்து செயல்பட்டு வருகின்றன.

வெளிநாடுகளில் உள்ள அரசுகளிடமும், அந்த மக்களிடமும் தமிழீழ விடுதலைக்கான ஆதரவினையும், பொதுக் கருத்தையும் திரட்டுவதுதான் எங்களது முக்கிய பணியாக இருந்து வருகிறது.

### பிரதமருடன் சந்திப்பு

இலங்கை தமிழர் படுகொலை சம்பந்தமாக நாங்கள் பிரதமர்இந்திரா காந்தியை சந்தித்துப் பேசினோம். நாங்கள் சொன்னதையெல்லாம் பிரதமர் கேட்டார். அவருக்கு சரியான தகவல்கள் கொடுக்கப்பட்டு வருகின்றன.

இலங்கை தமிழர்களுக்கு எதிராக இலங்கையில் நடந்துவரும் அராஜகச் செயல்களை தடுத்து நிறுத்தவேண்டும். இலங்கையில் முகாம்களில் உள்ள தமிழர்கள் உணவில்லாது தவிக்கின்றனர். அவர்களுக்கு உணவு தர வேண்டும். மருத்துவ சுகாதார வசதிகளை அவர்களுக்கு கிடைக்கச் செய்ய வேண்டும். மற்றும் பல நிவாரண உதவிகளைச் செய்ய வேண்டும் என்று நாங்கள் கோரினோம். இதற்கு பிரதமர் கூறுகையில் ''தேவையான நடவடிக்கைகளை எடுப்பேன்'' என்றார்.

நாங்கள் 25 நிமிடம் பிரதமரைச் சந்தித்துப் பேசினோம். அதன்பிறகு வெளி உறவுத் துறை அமைச்சர், பாதுகாப்புத் துறை அமைச்சர், நாடாளுமன்ற உறுப்பினர்கள் பலரையும் நாங்கள் சந்தித்துப் பேசினோம்.

நாங்கள் மறுபடியும் நாடாளுமன்றஉறுப்பினர்களையும் சந்தித்துப் பேச இருக்கிறோம்.

35 ஆண்டுகளாக சிங்கள அரசுடன் பேசிப் பார்த்ததில் எங்களுக்கு எந்தநன்மையும் கிடைக்கவில்லை.

எங்களுக்கு சம உரிமை, சமஷ்டி அரசியல்அமைப்பு பிராந்திய சுயாட்சி, மாவட்ட அபிவிருத்தி குழுக்களை ஏற்படுத்தித் தாருங்கள் என்று பல கட்டங்களில் பேசிப்பார்த்தோம். ஆனால் அவர்கள் எங்கள் கோரிக்கையை ஏற்கத் தயாராக இல்லை.

மாறாக கலவரங்களே மிஞ்சின. இனிமேலும் அவர்களுடன் பேசுவதில் பலனில்லை. எங்களுக்குத் தேவை தனிநாடுதான்.

### இழந்த உரிமையை கேட்கிறோம்

இலங்கையில் நாங்கள் தமிழீழம் கேட்பது பிரிவினை அல்ல. ஒரு காலத்தில் தமிழர்கள் இலங்கையை ஆட்சி புரிந்தனர். இழந்த அந்த உரிமையை நாங்கள் கேட்கிறோம்.

சிங்கள வெறியர்களே எங்களை இந்த நிலைக்கு தள்ளி உள்ளனர்.

எங்கள் எண்ணம் நிறைவேறுவதற்கு பலவித திட்டங்களை தீட்டி வருகிறோம். அதை இன்னும் வெளியிடவில்லை. முக்கியமான நேரத்தில் அதை வெளியிடுவோம்.

வாஷிங்டன் போஸ்ட் என்ற பத்திரிகை எங்கள் பிரச்னை தீர தனி நாடு தவிர வேறு வழியில்லை என்று எழுதியிருக்கிறது.

இலங்கை அரசே தன்னை அழித்துக் கொண்டு செல்லும் நிலையில் இருக்கிறது. இலங்கை அரசுக்கு அமெரிக்கா அதிக அளவு உதவியுள்ளது.

அமெரிக்க மக்கள் எங்களுக்குத் தார்மீக ஆதரவு தருகின்றனர்.

இனிமேல் என்ன செய்யப்போகிறோம் என்பதை நாங்கள் ஆராய்ந்து வருகிறோம், எதிர்கால திட்டங்களை வகுக்கவே நாங்கள் இங்கே வந்துள்ளோம்.

தமிழகத்தில் எங்களுக்கு ஏகோபித்த ஆதரவு கிடைக்கும் என்ற நம்பிக்கை உள்ளது. தமிழகத்தில் உள்ள அனைத்துக் கட்சிகளும் எங்களுக்காக குரல் கொடுக்கும் நிலையைப் பார்க்கிறோம்.

இலங்கைத்தமிழர்களை படுகொலை செய்வதை கண்டித்து தமிழக அரசு பந்த் நடத்தியதற்காக நாங்கள் கழக அரசுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறோம்.

இதற்காக தமிழ் நாட்டு மக்களுக்கு இலங்கைத்தமிழர்கள் என்றும் நன்றி உடையவர்களாக இருப்பார்கள்.

### தமிழக அரசுக்கு நன்றி

மாநில அரசு நடத்திய பந்த்தில்முதல் முறையாக இந்திய அரசும் கலந்து கொண்டது வரலாற்றுச் சாதனையாகும். இதற்காகவும் தமிழக அரசுக்கு நன்றி கூறிக் கொள்கிறோம்.

இலங்கையில் இருக்கும் 3 தமிழ் அமைச்சர்களின் செயல்கள் இலங்கைத் தமிழ் மக்களின் உணர்வுகளை பிரதிபலிப்பதாக இல்லை.

13 ராணுவவீரர் கொல்லப்பட்டதேஇப்போதைய சம்பவங்களுக்குக்காரணம் என்கிறார்கள். இது தவறு.

பொது பாதுகாப்பு சட்டம் என்று கொண்டு வந்தார்களோஅப்போதே பிரச்சினைகள் எழுந்தன.

அந்த சட்டத்தின்படி யாரையும் கண்டவுடன் சுடலாம். அப்படி கொல்லப்பட்டவர்களின்உடலை உறவினர்களுக்குக் கூட தராமல் புதைக்கலாம்.

இந்தச் சட்டப்படி சில இளைஞர்களை சுட்டனர். 5 மாணவிகளை ராணுவத்தினர் மாறி, மாறி கற்பழித்தனர். இதில் 2 பேர் கொல்லப் பட்டனர்.

இலங்கை தமிழர்களை படுகொலை செய்வதைக் கண்டித்து லண்டனில் பெரிய ஊர்வலம் நடத்தினோம். இலங்கை, இந்திய தூதரக அதிகாரிகளைச் சந்தித்து மனுக்கள் கொடுத்தோம். இங்கிலாந்து பிரதமரையும் சந்தித்து மனு கொடுத்தோம்.

இலங்கை தமிழர் படுகொலை சம்பந்தமாக இங்கிலாந்து நாடாளுமன்றத்திலும் விரிவான விவாதம் நடந்தது.

இலங்கையில் தமிழர் கட்சிகளை தடை செய்துள்ளனர். அதைப்பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. தொடர்ந்து நாங்கள் போராடுவோம்.

இவ்வாறு அவர்கள் கூறினர்.

## கிருஷ்ணா நதிநீர் திட்ட அறிக்கை: டெல்லியிடம் தாக்கல்

**ஐதராபாத், ஆக 7- சென்னைக்கு கிருஷ்ணா நதிநீர் கொண்டு வருவதற்கான திட்ட அறிக்கை மத்திய அரசிடம் தாக்கல் செய்யப்பட்டது.**

சென்னைக்கு கிருஷ்ணா நதி நீர் கொண்டுவரும் திட்ட அறிக்கையை தமிழ்நாடு அரசும், ஆந்திர அரசும் கூட்டாகத் தயாரித்து மத்திய நீர் நிலை கமிஷனுக்கு கடந்த 1-ந் தேதி அனுப்பி விட்டது.

ரூ. 800 கோடிக்கான திட்டம் இது. கால்வாய் வெட்டுவதற்கு நில ஆர்ஜிதம் செய்யும் பணிகள், குறுக்கே உள்ள பாறைகளைப் பிளக்கும் வேலைகள் ஆகியவை நடந்து வருகின்றன என்று ஆந்திர பொதுப்பணித்துறை அமைச்சர் சீனிவாசலு ரெட்டி கூறினார்.

அணுசக்தி கமிஷன் தலைவராக

## ராஜா ராமண்ணா நியமனம்

புதுடெல்லி, ஆக. 7— இந்திய அணுசக்திக் கமிஷன் தலைவராக டாக்டர் ராஜாராமண்ணா நியமிக்கப்பட்டுள்ளார்.

டாக்டர் எச். என், சேத்னா ஓய்வு பெற்றதை அடுத்து ராஜாராமண்ணா நியமிக்கப்பட்டுள்ளார்.

## ஆட்டோ ஓட்டுனர்கள் உண்ணாவிரதம்

சென்னை, ஆக. 7- இலங்கைத் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதைக் கண்டித்து சென்னை ஆட்டோ ஓட்டுனர் நல்வாழ்வுசங்கத்தைச் சேர்ந்த 20 பேர் அண்ணா சிலை முன் அடையாள உண்ணாவிரதம்இருந்தனர்.







PUBLISHED BY K RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D M. K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34. NELSON MANICKAM ROAD MADRAS 600 029.

EDITOR: E. PARASURAMAN



இலங்கை தமிழருக்குஉதவ

## அமைச்சர் காளிமுத்து ரூ. 3 ஆயிரம் நன்கொடை

சென்னை, ஆக. 7— சிங்கள வெறியர்களின் கொலைத் தாக்குதலுக்கு ஆளாகி உடமைகளை இழந்து உணவின்றி தவிக்கும் இலங்கைத் தமிழர்களுக்கு உதவ தாராள நன்கொடை தருமாறு முதல்வர் புரட்சிதலைவர் வேண்டுகோள் விடுத்தது தெரிந்ததே.

முதல்வர் புரட்சித் தலைவரின் வேண்டுகோளையேற்று பல்வேறு தரப்பினரும் நிதியுதவி அளித்து வருகின்றனர். அமைச்சர் காளிமுத்து இலங்கை தமிழர்களுக்கு உதவ ரூ. 3 ஆயிரம் நன்கொடை அளித்துள்ளார்.

இத்தொகையினை அமைச்சர் காளிமுத்து முதல்வர் புரட்சித்தலைவரிடம் நேற்று நேரில் வழங்கினார்.

இலங்கைத் தமிழர்

படுகொலை

## நியூயார்க்கில் ஆர்ப்பாட்டம்

நியூயார்க், ஆக. 7— இலங்கைத் தமிழர் படுகொலையைக் கண்டித்து இங்குள்ள இலங்கைத் தூதரகம் முன்பு 200-க்கும் மேற்பட்ட இலங்கைத் தமிழர்கள் கண்டன ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள்.

தூதரகத்தில் அவர்கள் மனு ஒன்றையும் அளித்தனர்.

## இலங்கைக்கு மேலும் 2 விமானங்களில் உணவு-மருந்து

சென்னை, ஆக. 7— சென்னையிலிருந்து இலங்கைக்கு மேலும் 2 தனி விமானங்களில் உணவுப் பொருட்களும் மருந்துகளும் அனுப்பப்பட்டன.

டப்பாக்களில் அடைக்கப்பட்ட மீன், கோதுமை மாவு, ரொட்டி, மற்றும் மருந்து வகைகள், லுங்கிகள். சமையல் எண்ணை ஆகியவை இதில் அடங்கும் அவற்றின் எடை சுமார் 20 டன்.

## திருக்குறள்: மத்திய அமைச்சர் வேண்டுகோள்

சென்னை, ஆக. 7— உலகம் போற்றும் திருக்குறள் பல்வேறு மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட வேண்டும் என்று மத்திய செய்தி ஒலி பரப்புத்துறை அமைச்சர் பகத் வேண்டுகோள் விடுத்தார்.

''தினமணி'' நிருபர் வி.என். சாமி எழுதியுள்ள கடல்போர்கள் என்ற புத்தகத்தை அமைச்சர் பகத் நேற்று சென்னை நிருபர்கள் சங்கக் கட்டிடத்தில் வெளியிட்டார். முதல் பிரதியை அன்பரசு எம். பி. பெற்றுக்கொண்டார்.

பகத் பேசுகையில் தமிழர்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பிறநாடுகளுடன் கப்பல்களை விட்டு வாணிபம் செய்தவர்கள் என்றும் தமிழர்களின் நாகரிகம் தொன்மை வாய்ந்தது என்றும் கூறினார்.

முன்னதாக நிருபர்கள் சங்கத் தலைவர் நரசிம்மன் வரவேற்றார். எல். வெங்கட்ராமன் அமைச்சருக்கு மாலை அணிவித்தார். சுயம்பு நன்றி கூறினார்.

அமைச்சர் திருநாவுக்கரசு தகவல்

# மீனம்பாக்கம் அருகே 100 ஏக்கர் நிலத்தில் புது தொழிற்பேட்டை

**சென்னை, ஆக. 7- சென்னையையடுத்த மீனம்பாக்கம் அருகே 100 ஏக்கர் நிலப்பரப்பில் புதிய தொழில் பேட்டை ஒன்று அமைக்கப்படும். இதற்கு மத்திய அரசு அனுமதி அளித்துள்ளது என்று அமைச்சர் திருநாவுக்கரசு தெரிவித்தார்.**

தமிழக தொழில்அமைச்சர் திருநாவுக்கரசு நேற்று சென்னையில்நிருபர்களைச் சந்தித்துப் பேசினார். அப்போது அவர் கூறியதாவது:-

உற்பத்தியாகும் பொருட்கள் முழுவதும் ஏற்றுமதி செய்வதற்கான தொழிற்பேட்டைஒன்றை சென்னை மீனம்பாக்கம் விமான நிலையம் அருகே அமைக்க மத்திய அரசு அனுமதி வழங்கியுள்ளது. இந்தத் தொழிற்பேட்டை மீனம்பாக்கம் அருகில் உள்ள கவுஸ்பஜார் கிராமத்தில் 100 ஏக்கர் நிலப்பரப்பில் அமைக்கப்படும்.

இதற்கான நிலத்தை கையகப்படுத்தி அபிவிருத்தி செய்வதற்காக தமிழக அரசு ரூ. 2 கோடியை செலவிடுகிறது.

### உயர் மட்ட குழு

இதற்கான உயர் மட்டக் குழு ஒன்று தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் தலைமையில் விரைவில் அமைக்கப்படும்.

தொழில்துறை, வருவாய்த்துறை, உள்துறை, நிதித்துறை, பொதுப்பணித்துறை மின்துறை செயலாளர்களும், குடிநீர் வாரிய அதிகாரிகளும் அதில் உறுப்பினர்களாக இருப்பார்கள்.

மொத்தம் ஒரு வருடத்திற்குள் அங்கு பல தொழிற்சாலைகள் கட்டப்பட்டு உற்பத்தி தொடங்கி விடும். சிறு தொழில்கள் நடுத்தர தொழில்களுக்கு தேவைப்பட்டால் கட்டிடமும் கட்டிக் கொடுக்கப்படும், அல்லது தொழிற்சாலைக்காக நிலத்தை குத்தகைக்கும்கொடுக்கப்படும். அப்பகுதி நிலங்கள் கையகப்படுத்தும் வேலை 2 மாதத்திற்குள் முடிந்து விடும்.

### தாராள நிதியுதவி

இத்தொழில் தொடங்குவதற்கு மூலதனத்தில் 15 சதவிதம் உதவித்தொகையாக அதிகபட்சம் ரூ. 15 லட்சம் வரை கொடுக்கப்படும்.

வட்டியில்லா விற்பனை வரி கடனாக ரூ. 1 கோடி வரை வழங்கப்படும். மின்சாரம் வெட்டே இல்லாத 5 தொழிற் பேட்டைகள் ஏற்கனவே தமிழ்நாட்டில் இருப்பது போல இந்த தொழிற்பேட்டைக்கும் அந்த சலுகை கொடுக்க இயலுமா என்பது பற்றி அரசு பரிசீலிக்கும்.

இந்த தொழிற்பேட்டையில் குறிப்பாக எலக்ட்ரானிக் மூலம் கணக்கு போடும் இயந்திரங்கள், ளையாட்டு இயந்திரங்கள் மோட்டார் உதிரி பாகங்கள் உயர்ந்த ரக ஜவுளிகள் தயாரிக்கப்பட்டு உற்பத்திவரி ஏதும் இல்லாமல் முழுவதும் வெளிநாட்டு ஏற்றுமதிக்கு மட்டுமே அனுமதிக்கப்படும்.

சென்ற நான்கு ஆண்டுகளாக இதற்காக முயற்சி செய்து கடைசியில் இப்போது தான் அனுமதி கிடைத்து இருப்பதால், இதற்கு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் சார்பில் பிரதமர் இந்திராகாந்திக்கும், மத்திய வர்த்தக இலாகா அமைச்சருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

### மேலும் 7 தாலுகா

தொழில்துறையில் பின்தங்கிய தாலுக்காக்களில் புதிதாக தொழிற்சாலைகளை தொடங்க முன் வந்தால் அந்ததொழிற்சாலையின் மூலதனத்தில் 15 சதவித உதவித் தொகையை மத்திய அரசு கொடுக்கிறது. இந்தத் திட்டத்தின் கீழ் தமிழ் நாட்டில் 33 தாலுக்காக்களை மத்திய அரசு அறிவித்திருந்தது.

இது தவிர அதே அளவு உதவித் தொகையை மாநில அரசே கொடுக்கும் திட்டப்படி மேலும் 31 தாலூக்காக்களை தமிழக அரசே தேர்வு செய்து அறிவித்தது.

இப்போது இந்த 31 தாலுகாக்களில் 15 தாலுகாக்களை மத்திய அரசு மேலும் தேர்ந்தெடுத்து அவற்றில் 10 சதவீத உதவித்தொகை கொடுக்க முன்வந்துள்ளது.

இதனால் அந்த 15 தாலுக்காக்களில் மாநில அரசுக்கு 5சதவீத மூலதனம் கொடுத்துவிட்டு மீதி 10 சதவீதம்மானியத்தில்சேமிப்புகிடைப்பதால் அதை வைத்து மேலும் 7 புதிய தாலுக்காக்களை தேர்ந்தெடுத்து இந்த 15 சதவிகித தமிழக அரசு சலுகைக்கு அனுமதிக்கலாமா என்று பரிசீலித்து வருகிறோம்.

இதன் மூலம் தமிழக அரசு தேர்ந்தெடுத்த தாலுகாக்களின் எண்ணிக்கை 31-லிருந்து 38 ஆக உயரும், இதற்கான நடவடிக்கை வேகமாக எடுக்கப்பட்டு வருகிறது.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

கோவை மகேசன், சேனாபதிராஜா:

## கொல்லப்படவில்லை: 2 தமிழர் தலைவர்கள் உயிருடன் உள்ளனர்

**சென்னை, ஆக. 7- கொல்லப்பட்டதாகக் கருதப்பட்ட இலங்கை தமிழர் தலைவர்கள் இருவர் உயிரோடு இருப்பதாகவும் அவர்கள் பாதுகாப்பாக இருப்பதாகவும் கூறப்படுகிறது.**

''சுதந்திரன்'' ஆசிரியர் கோவை மகேசனும் சேனாபதி ராஜாவும் கொல்லப்பட்டதாக ஏற்கனவே செய்தி வெளியாகி இருந்தது. தற்போது கிடைத்த நம்பத்தகுந்த தகவலின்படி அவர்கள் இருவரும் பட்டக் கிளப்பு பகுதியில் பாதுகாப்பாக இருப்பதாக தெரிய வருகிறது.

யாழ்ப்பாணத்தில்3 தமிழ் இளைஞர்களை ராணுவத்தினர் தாக்கினர் ஆனால் அவர்களை காவல் துறையினர் காப்பாற்றி இருக்கின்றனர்.

கொழும்புவில் இருக்கும் பல்லாயிரம் தமிழர்களை யாழ்ப்பாணத்திற்குக் கொண்டு செல்ல இந்திய அரசு மூன்று கப்பல்களை அனுப்பிவைத்திருக்கிறது. இந்தக் கப்பல்களை இலங்கை அரசு ஏற்றுக் கொள்ளுமா என்ற சந்தேகம் எழுந்து இருந்தது.

இறுதியாக இந்தக் கப்பல்களைப் பயன்படுத்திக் கொள்ள இலங்கை அரசு முன் வந்திருக்கிறது. சிதம்பரம் என்ற இந்தியக் கப்பலில் அகதிகளாகத் தவிக்கும் 1500 தமிழர்கள் கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்திற்குபயணமாகிறார்கள்.

### அச்சம்

இந்திய அரசு அனுப்பிய மூன்று கப்பல்களும் தொடர்ந்து செயல்பட்டாலும் கொழும்பிலுள்ள பல்லாயிரம் தமிழர்களை யாழ்ப்பாணத்திற்கு கொண்டுசேர்க்க இருவார காலம் ஆகும் என்று தெரிகிறது.

ஆதரவற்று அனாதைகளாகநிற்கும் தமிழர்களை பெரும்பான்மையாக வுள்ள யாழ்ப்பாணம் பகுதிக்கு அனுப்புவது விபரீத விளைவுகளை ஏற்படுத்தும் என்று இலங்கை அரசு அச்சப்படுகிறது.

இலங்கையில் உள்ள எல்லாத் தமிழர்களும் குறிப்பிட்ட பகுதியில் குடியேற்றப்பட்டால் இலங்கைத் தமிழர்களின் இயக்கம் உத்வேகம் பெறுமோ என்ற அச்சம் இப்போது இலங்கை அரசுக்கு ஏற்பட்டிருக்கிறது.

## சங்கிலி திருட்டு: ஆசாமி கைது

சென்னை, ஆக. 7— கோடம்பாக்கத்தைச் சேர்ந்த விஜயலட்சுமி அபிராமபுரம் சென்ற போது அவரது கழுத்தில் கிடந்த தங்கச்சங்கிலியை ஒரு நபர் பறித்துக் கொண்டுஓடிவிட்டாராம்.

இதுபற்றி போலீசில் புகார் செய்யப்பட்டது. அபிராமபுரம் போலீஸ் இன்ஸ்பெக்டர் பாலகிருஷ்ணன் புலன் விசாரணை செய்து, ஆரி என்ற வாலிபரை கைது செய்தார். தங்க சங்கிலி மீட்கப்பட்டது. அந்த வாலிபர் மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

இலங்கைத் தமிழர்கட்கு

## கடம்பத்தூர் நகைஅடகு வியாபாரிகள் 1001 ரூபாய் நிதி உதவி

சென்னை, ஆக. 7— கடம்பத்தூரில் நடைபெற்ற கண்சிகிச்சை முகாமில் 321 பேர்களுக்கு அமைச்சர் டாக்டர் அண்டே இலவச மூக்கு கண்ணாடிகளை வழங்கினார்.

முகாமில் அமைச்சர் டாக்டர் அண்டேயிடம் கடம்பத்தூர் நகை அடகு வியாபாரிகள் சங்கத்தின் சார்பில் 1001 ரூபாய் இலங்கை தமிழர்கள் உதவிக்காக நிதியளிக்கப்பட்டது.

இலங்கை:

## தமிழ் தலைவர்கள் ஆலோசனை

கொழும்பு, ஆக. 7— இலங்கை அரசு புதிதாக நிறைவேற்றியுள்ள சட்டங்கள்பற்றியும்இலங்கை தமிழர்பிரச்சினைகுறித்தும் இன்று, வவுனியா என்ற இடத்தில் அமிர்தலிங்கம் உட்பட தமிழ்தலைவர்கள் சந்தித்து ஆலோசனை நடத்துகிறார்கள் என ஓர் தகவல் கூறுகிறது.

யோகேஸ்வரன், சம்பந்தன் என்ற இரு எம். பி.க்கள் தலைமறைவாக உள்ளதாகவும் கூறப்படுகிறது.

## அண்ணா நினைவகத்தில் கலைமணி அஞ்சலி

சென்னை, ஆக. 7- கழக சட்ட மேலவை உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள கிள்ளை க. கலைமணி நேற்று காலை சட்ட மேலவை உறுப்பினராக பதவி ஏற்றார். அதன்பின் மாலை 3 மணிக்கு அண்ணா நினைவகம் சென்று மலர் வளையம் வைத்து அஞ்சலிசெலுத்தினார். பின் மீனவர் தலைவர் மறைந்த ஜீவரத்தினம் நினைவிடம் சென்று அஞ்சலிசெலுத்தினார்.

திருவொற்றியூரிலுள்ள மறைந்த கபாலகுருசாமியின் இல்லம் சென்று அவரது படத்திற்கு மலர் மாலை அணிவித்து அஞ்சலி செலுத்தினார்.

இந்நிகழ்ச்சிகளின் போது கலைமணி எம். எல். சி யுடன் சிதம்பரம் நகர கழக செயலாளர் ராமதுரை, புவனகிரி ஒன்றிய செயலாளர் பி. ராதாகிருஷ்ணன், குமரத்தி ஒன்றிய செயலாளர் கே. எஸ். ராதா கிருஷ்ணன், எம். எஸ். குமார், கல்யாணசுந்தரம் முன்னாள் எம். பி., ஏ. முருகேசன், காசிநாதன், சுந்தரமூர்த்தி ஆகியோர் உடன் சென்றனர்.

# கட்டிட தொழிலாளர் குறைந்தபட்சஊதியம் திருத்தி அமைப்பு

கழக அரசு உத்தரவு

**சென்னை. ஆக. 7- கட்டிடம் கட்டுதல், கல் உடைத்தல், சாலை போடுதல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களது குறைந்தபட்ச ஊதியத்தை திருத்தி அமைத்து கழக அரசு உத்தரவிட்டுள்ளது.**

சாலை போடுதல் கட்டிடம் கட்டுதல், கல் உடைத்தல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்கு 1948 ஆம் ஆண்டு குறைந்த அளவு ஊதியச் சட்டத்தின் கீழ் குறைந்த அளவு ஊதிய வீதங்களை தமிழக அரசு 21-7-83 முதல் திருத்தியமைத்துள்ளது.

குறைந்த அளவு ஊதிய வீதங்களை நிர்ணயிப்பதற்காக மாநிலம் மூன்று பிரிவுகளாக அதாவது, மலைப்பகுதி 'ஏ' பிரிவு எனவும். நகராட்சிகள் 'பி' பிரிவு எனவும்மற்றும் ஏனைய பகுதிகள் 'சி' பிரிவு எனவும் பிரிக்கப்பட்டுள்ளது.

சாலை போடுதல், கட்டிடம் கட்டுதல், சாலைகளைச்சரிப்படுத்துதல், கல் உடைத்தல் வேலைகளில் ஈடுபட்டுள்ள 32வகையான தொழிலாளர்களுக்கும், குவாரிகளில் கல் உடைத்தல் தொழிலில் ஈடுபட்டுள்ள 7 வகையான தொழிலாளர்களுக்கும் குறைந்த அளவு ஊதிய வீதங்கள் நிர்ணயிக்கப்பட்டுள்ள. பிரிவு ஏ, பி, சி, ஆகிய மூன்று பிரிவுகளுக்கும் திருத்தியமைக்கப்பட்ட அதிகப்படியான ஊதியம் முறையே ரூ. 24, ரூ. 22 மற்றும் ரூ. 20 ஆகும். மற்றும் குறைவான ஊதியம் முறையே ரூ. 11. ரூ. 10 மற்றும் ரூ. 9 ஆகும்.

### சமஊதியம்

அளவீட்டு அடிப்படையில் பணிபுரியும் தொழிலாளர்களது தினமொத்த ஊதியம் அவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள குறைந்த அளவு ஊதியத்தை விடக் குறைவாக இருக்கக்கூடாது என்றும் ஆண் தொழிலாளிக்கும், பெண் தொழிலாளிக்கும் சமவேலைக்கு சமமானகூலி கொடுக்க வேண்டும் என்றும் ஆணையிடப்பட்டுள்ளது.

மேற்கண்ட ஊதியங்கள் தவிர சென்னை நகருக்கான நுகர்வோர் குறியீட்டெண்ணை ஒட்டி மாறுபடும் அகவிலைப்படி வழங்கவும் வகை செய்யப்பட்டுள்ளது. 455 புள்ளிகளுக்கு மேல் உயரும் ஒவ்வொரு புள்ளிக்கும் நாளொன்றுக்கு 3 பைசா வீதம் கணக்கிடப்பட வேண்டும். அகவிலைப்படியில் மாற்றம் ஒவ்வொரு ஆண்டும் இரண்டு முறை அதாவது, ஜனவரி முதல் நாள் மற்றும் ஜூலை முதல் நாள் செய்யவேண்டும். ஜனவரி முதல் நாள் செய்யும் அகவிலைப்படி மாற்றம் அதற்கு முந்திய ஆண்டு ஜனவரி முதல் ஜூன் வரையிலிருந்த சராசரி குறையீட்டெண் அடிப்படையிலும், ஜூலை முதல் நாள் செய்யும் மாற்றம் அதற்கு முந்திய ஆண்டு ஜூலை முதல் டிசம்பர் வரையிலான சராசரி குறியீட்டெண் அடிப்படையிலும் செய்யப்பட வேண்டும்.

மேற்கண்ட திருத்தி அமைக்கப்பட்ட ஊதிய வீதங்களைவிட அதிகமாக ஊதியம் பெற்று வரும் தொழிலாளர்கள் அவ்வூதிய வீதங்களை தொடர்ந்து பெற்று வரவும் ஒரு அறிவிக்கையை தனியாக அரசு வெளியிட்டுள்ளது.

## அஸ்ஸாமில் மீண்டும் போராட மாணவர் யூனியன்முடிவு

கௌஹாத்தி, ஆக 7- அனைத்து அஸ்ஸாம் மாணவர் யூனியனின் செயற்குழுக் கூட்டம் நடந்தது. மீண்டும் போராட்டங்களை ஆரம்பிக்க அந்த யூனியன் முடிவு செய்துள்ளது.

நாளை நடைபெறும் அனைத்து அஸ்ஸாம் மாணவர் யூனியன், கண சங்க்ராம்பரிஷத் ஆகியவற்றின் கூட்டு செயற்குழு கூட்டத்துக்குப் பின் போராட்ட திட்டம்பற்றிய முறையான அறிவிப்பு வெளிவரும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

அஸ்ஸாம் போராட்டம் கடந்த 4 மாதங்களாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

புதிதாக ஆரம்பிக்கப் படவிருக்கும்போராட்டம் பற்றிய விவரங்களை தெரிவிக்க மாணவர் யூனியன் பொதுச் செயலாளர் புக்கான் மறுத்து விட்டார். இந்த மாதம் போராட்டத்தை மீண்டும் ஆரம்பிக்கப் போகிறோம் என்றார் அவர்.

தாழ்த்தப்பட்ட மக்கள் மீதான

தாக்குதலுக்கு

# கடும் தண்டனை தர தனிகோர்ட் அமைத்த தமிழக அரசு

நாடாளுமன்றத்தில் தகவல்

**புதுடெல்லி, ஆக 7- தாழ்த்தப்பட்டமக்கள் மீதான கொடுமைகளுக்கு கடும் தண்டனைதர தமிழகம், ஆந்திரா உட்பட 5 மாநிலங்கள் தனி நீதிமன்றங்களை அமைத்துள்ளன என்று நாடாளுமன்றத்தில் உள்துறை ராஜாங்க அமைச்சர் லஸ்கர் கூறினார்.**

மாநிலங்களவையில் கவனஈர்ப்புத் தீர்மானம் ஒன்றுக்குப் பதிலளித்து உள்துறை ராஜாங்க அமைச்சர் லஸ்கர் கூறியதாவது;—

தாழ்த்தப்பட்ட மலைவாழ் மக்களுக்கு எதிராக கொடுமை விளைவிப்போருக்கு விரைவில் தண்டனை வழங்க தமிழ்நாடு, ஆந்திரா, ராஜஸ்தான், பீகார், மத்தியப்பிரதேசம் ஆகிய 5 மாநிலங்கள் தனி நீதிமன்றங்களை அமைத்துள்ளன.

பாதிக்கப்பட்ட மக்களுக்குஇழப்பீடுகள் வழங்க தமிழ்நாடு, ஆந்திரா, பீகார், இமாசலபிரதேசம் கர்நாடகம், ஒரிசா, ராஜஸ்தான் ஆகிய மாநிலங்கள் திட்டங்களை தயாரித்துள்ளன.

தாழ்த்தப்பட்ட மலைவாழ் மக்களுக்கு எதிராக கொடுமைநடப்பதை முன் கூட்டியேதடுக்கவும், உதவி அளிக்கவும், குற்றவாளிகளைதண்டிக்கவும் மாநில அரசுகளுக்கு மத்தியஅரசு வழிமுறைகளை வகுத்துக் கொடுத்துள்ளது.

இவ்வாறு லஸ்கர் கூறினார்.

கோவை மார்க்கெட்

கமிட்டி கலைப்பு,

## தமிழக அரசு அவசரச் சட்டம்

சென்னை, ஆக. 7— கோவை மார்க்கெட் கமிட்டிகலைப்பைமேலும் ஓராண்டுக்கு நீடித்து தமிழக அரசு அவசரச் சட்டம் ஒன்றை பிறப்பித்துள்ளது.

இச்சட்டம் முன் தேதியிட்டு அதாவது மே 11ந் தேதி முதல் அமுலுக்கு வந்ததாக கருதப்படும் எனவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

# அமைச்சர் ஆர். எம். வீ.க்கு மத்திய அமைச்சர் பாராட்டு!

சென்னை, ஆக. 7— மக்கள் தொடர்பு, மக்கள் உறவுஆகியபணிகளில் தமிழக செய்தித்துறைஅமைச்சர் ஆர். எம். வீ. தலை சிறந்து விளங்குகிறார் என்று மத்திய தகவல் ஒலி பரப்புத்துறை அமைச்சர் பகத் பாராட்டுத் தெரிவித்தார்.

நேற்று இந்திய மக்கள் தொடர்பு சங்கம் சார்பில் சென்னையில் கருத்தரங்கு நடைபெற்றது. அதற்கு அமைச்சர் ஆர். எம். வீ. தலைமை வகித்தார்.

மத்திய ஒலிபரப்புத் துறை அமைச்சர் பகத் கலந்து கொண்டு பேசினார்.

பகத் பேசியதாவது:—

நாட்டு முன்னேற்றத்திற்கும்—நாட்டு மக்கள் முன்னேற்றத்திற்கும் மக்கள் தொடர்புத்துறை சிறந்த பணிகளை ஆற்றி வருகிறது.

சாதாரண மனிதன் புரிந்து கொள்ளும் அளவுக்கும் அவர்கள் பயனடையத் தக்க வகையிலும் மக்கள் தொடர்புத் துறை பணியாற்ற வேண்டும்.

ஒரு குறிப்பிட்ட தொழிலுக்கோ அல்லது குறிப்பட்ட ஒரு அமைப்புக்கோ பொது மக்கள் அந்த அமைப்பைப் பற்றி புரிந்து கொள்ளும் அளவுக்கு சிறந்தமுறையில் மக்கள் தொடர்புத்துறை அமையவேண்டும்.

மக்களின் தேவைகளை நன்கு அறிந்து அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் முக்கிய பணிகளை மிகவும் சிறப்பான முறையில் அமைச்சர் ஆர். எம். வீ. பணியாற்றி வருகிறார். மக்கள் தொடர்பு என்பது மக்கள் உறவு என்று அமைச்சர் ஆர். எம். வீ. குறிப்பிட்டது மிகவும் பொருத்தமாகும்.

மக்கள் தொடர்பு என்பது பற்றி எல்லா விவரங்களையும் அவர் சிறப்பாக எடுத்துக்கூறினார்.

அதைவிட நான் அதிகமாக ஒன்றும் சொல்லப் போவதில்லை.

மக்கள்தொடர்புத்துறை எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு அமைச்சர் ஆர். எம். வீ ஓர் எடுத்துக்காட்டாக இருக்கிறார்.

அவர் செய்தித்துறைக்கு அமைச்சராக இருப்பது பெருமைப்பட கூடியது.

இவ்வாறு பகத் பாராட்டிப் பேசினார்.

தொலைக் காட்சிகள், வானொலி நிலையங்கள் மக்களுக்கு உகந்த செய்திகளையும் நிகழ்ச்சிகளையும் ஒலிபரப்பவேண்டும்.

வளர்ந்து வரும் காலத்திற்கு ஏற்றவாறு தொழில்நுட்ப சாதனங்களைப் பயன்படுத்தி மக்களுக்கு அறிவூட்டும் நிகழ்ச்சிகளை ஒலிபரப்ப வேண்டும் என்றும் பகத் மேலும் கூறினார்.

விழா துவக்கத்தில் கே. கே. நாணு வரவேற்றார்.

## புதுவை நிர்வாகியாக பானர்ஜி பொறுப்பேற்றார்

பாண்டிச்சேரி, ஆக. 7- கர்நாடக மாநில கவர்னராக பதவி வகிக்கும் ஏ. என். பானர்ஜி பாண்டிச்சேரியின் நிர்வாகப் பொறுப்பையும் ஏற்றுள்ளார்.

பாண்டிச்சேரி ராஜ் பவன் மாளிகையில் அவர் நேற்று இந்தக் கூடுதல் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்.

பாண்டிச்சேரி கவர்னராக பணியாற்றிய கே. எம். சாண்டி குஜராத் மாநில கவர்னராக நியமிக்கப்பட்டுள்ளார். கே. எம். சாண்டியும் நேற்று குஜராத் மாநிலத்தில் கவர்னராக பொறுப்பேற்றார்.

இலங்கை படுகொலை

## வீட்டுவசதி வாரிய குடியிருப்போர் சங்கம் கண்டனம்

சென்னை, ஆக. 7— தமிழ்நாடு வீட்டுவசதி வாரிய வாடகை இல்லக் குடியிருப்போர் சங்கக் கூட்டம் சங்கத் தலைவர் எஸ். விநாயகம் தலைமையில் நடந்தது. இலங்கையில் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதை கண்டித்தும், பாதிக்கப்பட்டவர்களுக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதுநிவாரண நிதிக்கு நன்கொடை அளிக்கவும் முடிவு எடுக்கப்பட்டது.

சங்க செயலாளர் கோபாலகிருஷ்ணன் நன்றி கூறினார்.



சேலஞ்சர்ஸ் மெல்லிசை நிகழ்ச்சி என்ற பெயரில் பிரபலமாக பாடி வரும் ரகுமாயி ராமன்

# பிரபு - சுலக்ஷணா காதல் களியாட்டம்

ஸ்டேஷன் மாஸ்டரான பிரபு ஊர்திருவிழாவுக்கு வருகிறார். அங்கு கிராமத்து பெண் சுலக்ஷணாவும் இருந்தார்.

நடனக்குழுவில் வந்த அனுராதாவும்இன்னொருவரும் பாடி ஆடினர்.

அன்னக்கிளி அம்மனுக்கு ஆடியிலே மாவிளக்கு என்று பிரபு—சுலக்ஷணா இருவரும் அவர்களுடன் சேர்ந்து பாடி ஆடி காதல்மொழி பேசுகின்றனர்.

இக்காட்சி ஸ்ரீமாணிக்கம் பிலிம்ஸ் ''உயிரே உனக்காக'' படத்திற்காக அணில்குமார் ஒளிப்பதிவில் படமாக்கப்பட்டது.

கவுண்டமணி, செந்தில், கல்லாப்பெட்டிசிங்காரம், புதுமுகம் மீனா காந்திமதி எஸ்.என். பார்வதி காஜா செரீப் மற்றும் பலர் நடிக்கும் இதற்கு இளைய ராஜா இசையமைக்கிறார்.

கல்லக்குடி மாணிக்கம் தயாரிக்கும் இதற்கு எம். எஸ். ராஜா வசனம்தீட்ட திரைக்கதை அமைத்து எஸ். குமார் டைரக்டு செய்து வருகிறார்.

## தெலுங்கில் 'மலையூர் மம்பட்டியான்'

கிருஷ்ணமராஜ், பிரபாகர்ரெட்டி ராதிகா, சத்தியநாராயணா, ஜெயமாலினி நடிக்க 'மலையூர் மம்பட்டியான்' தெலுங்கில் வளருகிறது.

விஸ்வசித்ரா கம்பைன்ஸ் சார்பில் ராமகிருஷ்ண ராஜு தயாரிக்கும் இதன் ஒளிப்பதிவை ரங்கா கவனிக்கிறார்.

சக்கரவர்த்தி இசையமைக்கும் இதன் திரைக்கதை, டைரக்ஷனை ராஜசேகர் ஏற்றுள்ளார்.



✻✻ பிரபு - சிலுக்கு
படம் : சூரக்கோட்டை சிங்கக்குட்டி

# மலர் மஞ்சங்கள் மகரந்தங்கள்

பி. எஸ். வீரப்பாவின் வீரலட்சுமி கம்பைன்ஸ் ''சாட்சி'' படம் வேகமாக வளர்ந்து வருகிறது. இதற்க்காக சமீபத்தில் விஜயகாந்த் விஜிபாடும்

:'மலர் மஞ்சங்கள்
மகரந்தங்கள்
இளமுத்தங்கள்
இடும் சத்தங்கள்''

என்று ஆடும் பாடல் காட்சி விஜய் ஒளிப்பதிவில் படமாக்கப்பட்டது.

பிரசாத் ஸ்டுடியோவில் கண்ணாடி மாளிகையை ஜீப்பின் உதவியால் விஜயகாந்த் அடித்து நொறுக்கி வில்லன்களிடம் சண்டை போடும் காட்சியும் படமாக்கப்பட்டது.

நம்பியார், பண்டரிபாய் சங்கிலிமுருகன், நிழல்கள் ரவி, சூரியகாந்த், செந்தில் செஞ்சிகிருஷ்ணன், அனுராதா, அம்ஜத்குமார், வீரராகவன் மற்றும் பலர் நடிக்க பி. எஸ். வி. அரிகரன், தயாரிக்கிறார்.

சங்கர்-கணேஷ் இசையமைக்கும் இதன் கதையை ஷோபா எழுத திரைக்கதை, வசனம்எழுதி எஸ். ஏ. சந்திரசேகர் இயக்குகிறார்.

## ஏதோ மோகம் பாடல் பதிவு

பரணி சினி ஆர்ட்ஸ் ஏதோ மோகம் படத்தை தயாரித்து வருகின்றனர். இப்படத்திற்காக ''நீராடு என் கண்ணா நீ என்னோடு
தேகம் எங்கினும் மோகம் சங்கமம்,'

என்று பானு பிரியாவுடன் சுரேஷ் ஆடிப்பாடிய காட்சி படமாக்கப்பட்டது.



குமாரி விஜயலட்சுமி

## சுரேஷை தாக்க சங்கிலி முருகன் சூழ்ச்சி

அப்பாவியான சுரேஷை மயக்கி சொத்துக்களை தன் பெயருக்கு மாற்றிக் கொள்ள தாய் மாமனான சங்கிலிமுருகன் மந்திரவாதிஒருவரை வரவழைக்கிறார்.

மந்திரவாதி வீட்டிற்குள் நுழையும் போது அங்கிருந்த கணக்குப்பிள்ளை மந்திரவாதியை கிண்டல் செய்கிறார், அவர் மந்திரவாதி என்பதை சொல்ல, இவர் மறுக்கிறார்.

உடனே அவர் மந்திரம் சொல்ல, கணக்கப்பிள்ளை சுருளிராஜனை போல் பேசி நடிக்கிறார். மந்திரத்தை மாற்றி மந்திரவாதி கூற, பாக்கியராஜ்போல் நடித்து பேசுகிறார். மறுபடியும்பழைய நிலைமைக்கு கணக்கப்பிள்ளையாக மாறுகிறார்.

மந்திரவாதி வெளியே சென்றதும், கணக்கப்பிள்ளை சுரேஷிற்கு வந்திருக்கும் ஆபத்தை ஓடிச் சென்று கராத்தே மணியிடம் சொல்லுகிறார்.

கணக்கப் பிள்ளையாக ராக்கெட் ராமநாதன் மந்திரவாதியாக சௌத்ரி நடித்த இக்காட்சி லோகேஷ் ஒளிப்பதிவில் 'வளர்த்த கடா' படத்திற்காக படமாக்கப் பட்டது.

பயில்வான், விஜி, மனோஜ், ரோகினி, குள்ளகாந்தி, மாஸ்டர் நடராஜ், பூர்ணம்விஸ்வநாதன், இன்னும் பலர் நடிக்கும் இதை கே. ஆர். சிவகுமார் தயாரிக்கிறார். சங்கர்கணேஷ் இசையமைக்க, கருமாரி கந்தசாமி கதை, திரைக்கதை, வசனம் எழுத கந்தசாமி-சிங்காரம் கூட்டாகஇயக்கி வருகின்றனர்.



✻✻ குணாஸ்ரீ
படம் : இளமை ஒரு இனிமை

# கலை விருந்து

## முந்தானை முடிச்சு

விமர்சனம்

சாதாரணவிஷயங்களை ஜனங்களின் ரசனைகளுக்கேற்ப வித்தியாசமான முறையில் சொல்வதில் வில்லாதிவீரர் பாக்யராஜ். அந்த வகையில் சாதாரண கதைக்கருத்து கொண்ட 'முந்தானை முடிச்சுவிற்கு தன்னுடைய திரைக்கதை வசனம், டைரக்ஷன் என்ற திறமையால் வலுவூட்டி களத்தில் இறக்கியிருக்கிறார். எதிரிகள் இல்லாததால் ஏகோபித்த வெற்றியும் பெறப்போகிறார்.

பருவமடைந்த பின்னும் வெகுளித்தனமாக சிறுவர்களோடு சேர்ந்து விளையாடிக் கொண்டிருக்கும் பரிமளத்திற்கு தன்னுடைய ஊருக்கு பள்ளி ஆசிரியராக வரும் இளவயதிலேயே மனைவியை இழந்து கைக்குழந்தைக்கு தாய், தகப்பன் எல்லாமே ஆகிவிட்ட வாலிபர் ஒருவர் மீது இரக்கம் பிறக்கிறது. இரக்கம் கிறக்கமாகி கலாட்டா கல்யாணத்தில் முடிகிறது. கல்யாணமாகியும்பிரம்மச்சாரியாகவும், வேண்டா வெறுப்பாகவும் இருக்கும் தன்கணவனை தன்னுடைய அன்பால் மாற்றுகிறாள். இதுகதை.

வெகுளித்தனமாக இருக்கும் பெண் ஒருத்தி ஒருவர் மீது பரிதாபப்பட்டு அவர் துன்பங்களை பகிர்ந்துகொள்ள முயல்வதொன்றும் பெரிய சமாச்சாரம் இல்லை. விநய மானவர்களை விட வெகுளித்தனமானவர் களுக்குப் பரிதாப, பச்சாதாப உணர்ச்சி இருப்பதென்பது இயற்கையே. அந்த சாதாரண கதை கருவை மக்களிடம் சொல்லக்கூடிய பாணியில் தான் ஒரு திரைக்கதை எழுத்தாளன், வசன கர்த்தா, இயக்குனர் இப்படி எல்லோருடைய திறமையும் அடங்கியிருக்கிறது. அந்த வகையில் முந்தானை முடிச்சின்திரைக்கதையாளர் வசனகர்த்தா டைரக்டர் என்ற மூவருக்கும் கிடைக்க வேண்டிய பாராட்டுக்களை பாக்யராஜ் பெறுகிறார். நடிகர் பாக்யராஜைப் பற்றி சொல்லவேண்டியதில்லை தன்னுடைய அசட்டுத்தன நடிப்பால் அப்ளாஸ்களைப் பெறுவதில் வல்லவர். அந்த வகையில் இந்தப் படத்திலும் அப்ளாஸ்களை பெறுகிறார்.

பரிமளம் பாத்திரத்தில் வரும் ஊர்வசி வெகுளித்தனத்திலும் சரி, சந்தேகக்கணை தொடுக்கும் கணவனிடம் (பாக்யராஜிடம்) உன்சந்தேகமும்போகபோறதில்லை, நான் சந்தோஷப்படப் போறதும் இல்ல'' என்று கலங்கி நிற்கும் போதும் சரி மிக அருமையாக நடித்துள்ளார். ஊர்வசி புதுமுகமாம். (உஸ்... வெளியே சொல்லாத சண்டைக்கு வரப் போறாங்க) தமிழ் திரையுலகிற்கு நடிக்கத்தெரிந்த நடிகையொருவர் கிடைக்கமாட்டாரா என்று ஏங்கிக்கொண்டிருக்கும் தருணம். நல்ல வேளை ஊர்வசிகிடைத்து விட்டார்.

வைத்தியராக வரும் பயில்வானுக்கு இந்த படத்தில் நல்லதொரு சந்தர்ப்பம் கிடைத்துள்ளது. வைத்தியரையும் முருங்கைகாயையும் மக்கள் மறக்க மாட்டார்கள். ஆசிரியையாக வரும் தீபாவின் நடிப்பிலும் குறையில்லை. எல்லோரையும் தூக்கி சாப்பிடுவதுபோல் 3 வாண்டுகள் (சிறுவர்கள்) வருகிறார்கள். இந்த மூவரும் வரும் காட்சியெல்லாம் தியேட்டரே கலகலக்கிறது.

பாடல்கள் அனைத்தும் நன்றாக உள்ளது. கங்கை அமரனின் இசையும் நன்றாக உள்ளது.

இரட்டை அர்த்தம் தொனிக்கும் வசனங்களுக்கு பஞ்சமே இல்லை. ஜனங்கள் அதை விரும்புகிறார்களென்றாலும் அது இளைய சந்ததியை பாதிக்கும். பாக்யராஜ் இதை நினைவில் கொள்வது எதிர்கால சந்ததிக்கு பயனுள்ளதாக இருக்கும்.

4 அல்லது 6 மாதத்திற்கு ஒரு முறை ஒரு படம் கொடுத்தாலும் முழுக்க முழுக்க அதன் வெற்றியில் கவனம் செலுத்தி வருடத்திற்கு 2 அல்லது 3 படங்களை அதுவும் வெற்றிப் படமாகத் தரும்பாக்யராஜின் பணி பாராட்டுக்குரியது.

முந்தானைக்குரிய கிளுகிளுப்பும், முடிச்சுக்குள்ள விவேகமும் நிறைந்த இந்த முந்தானை முடிச்சு மக்களுக்கு பிடிச்ச முடிச்சாகவே இருக்கிறது. எல்லா இடங்களிலும் பெரியதொரு வரவேற்பை பெறும்.

- பாலுமணி



✻✻ அனுராதா
படம் : டக்கர் பேபி

## பிரபுராஜீவ் மோதல்

கோடீஸ்வரர் ராமநாதனுக்கு இருபுதல்வர்கள். இருவரும் ஊதாரித்தனமாக பணத்தை செலவு செய்கிறார்கள். அவசர திருமணமும் செய்து, போலிக் குழந்தையை காட்டி, சொத்தை அபகரிக்க முயற்சி செய்கிறார்கள். போலிக் குழந்தை விஷயம் நம்பிக்கையுள்ள வேலைக்காரனுக்கும், சமையல்காரிக்கும் தெரிந்து விடுகிறது.

வேலைக்காரனே இந்த குட்டை போட்டு உடைத்து விடுகிறான். ஏற்கனவே நம்பிக்கையுள்ள வேலைக்காரன்மீது இன்னும் ஒரு பற்றும் பாசமும் ராமநாதனுக்கு ஏற்படுகிறது. கோடீஸ்வரர் ராமநாதனையே அடித்து உதைக்க வரும் ஊதாரி பிள்ளைகளை வேலைக்காரனே அடிக்க ஆரம்பிக்க பலத்த மோதல் ஏற்படுகிறது. முடிவில் நம்பிக்கைக்கு பாத்திரமான வேலைக்காரனே வெற்றியடைய கோடீஸ்வரர் ராமநாதன் பாசத்துடன் அழைத்து வீட்டுக்குள் செல்கிறார்.

நம்பிக்கையுள்ள ஊழியனாக பிரபும் ராமநாதனாக பூர்ணம் விஸ்வநாதனும், புதல்வர்களாக ராஜுவும் புதுமுகம் அரவிந்தும் சமையல்காரியாக ராதாவும் நடிக்கும் காட்சி குமரவேல் பிலிம்ஸ் ''முத்து எங்கள் சொத்து' வண்ணப்படத்திற்காக சேலம் மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

மற்றும் இப்படத்தில் முக்கியமான நகைச்சுவை காட்சி ஒன்றில் தங்கவேலு, பூர்ணம் விஸ்வநாதன், பிரபு ராதா கலந்துகொண்டு நடித்தார்கள்.

# வீட்டிற்கு வராதே: சுரேஷிற்கு மனோசித்ரா கட்டளை

கண்ணன் தன்னுடைய ஆபிஸில் ஸ்டெனோவாக வேலை பார்க்கும் லட்சுமியின் வீட்டிற்கு வருகிறான் லெட்சுமியின் தங்கை மஞ்சுவிடம் லெட்சுமியைப் பற்றி விசாரித்துக் கொண்டிருக்கும் நேரம் குளித்து விட்டு அரை குறை ஆடையுடன் வருகிறாள் லெட்சுமி. கண்ணனை பார்த்து அதிர்ச்சியடைந்து பின் வெட்கத்துடன் உள்ளே ஓடி போய் விடுகிறாள்.

மாற்றுடை அணிந்து கொண்டுவரும் லெட்சுமி கண்ணனிடம் வந்த காரணம் கேட்க, ஞாயிற்றுக்கிழமை பொழுது போகவில்லை. சும்மா பார்த்துட்டு போகலாம்னு வந்தேன்'' எனக்கூற லெட்சுமி கண்டிக்கும் தொனியில் 'நீங்க எதார்த்தமாகத்தான் வருகிறீர்கள் - நாமளும் எதார்த்தமாத்தான் பழகுவோம். ஆனா அக்கம் பக்கத்துல உள்ளவங்க எதார்த்தமா நினைக்க மாட்டாங்க, எனக் கூற கண்ணன் அதிர்ச்சி அடைந்தவாறு ''லெட்சுமி நீ சொன்னமாதிரிஎதார்த்தமாகத்தான் வந்தேன் ஆனா ஒரு நல்ல விசயத்தை தெரிஞ்சிக்கிட்டேன் எனக் கூறி விட்டு போகிறான்.

கண்ணனாக சுரேஷும், லெட்சுமியாக மனோசித்ராவும், மஞ்சுவாக இந்திராவும் நடித்த இக்காட்சியை செல்வம் மணி கிரியேஷன்ஸ் ''நில நிலா ஓடிவா'' என் வண்ணப்படத்திற்க படமாக்கினார் ஓ

வாளரும் டைரக்டருமான ராஜா. கதை-திரைக்கதை-வசனங்களை முத்தரசன் எழுத இசையை சங்கர்—கணேஷ் அமைக்கிறார். என். கே. சூரியா போஷ் தயாரிக்கும். இப்படத்தில் திலீப், கவுண்டமணி ஐ. எஸ். ஆர். புதுமுகம் ராஜ்கமல், டி. கே. நடராஜன், வனிதா, பி. ஆர். வரலட்சுமி மற்றும் கலர் நடிக்கிறார்கள்.

## எல்லைக்கு அப்பால்

ஆதிபராசக்தி ஆர்ட்ஸ் என்ற படக்கம்பெனியினர் ''எல்லைக்கு அப்பால்'' என்ற புதிய படத்தை தயாரிக்கின்றனர்.

இந்திய எல்லைக்கு அப்பால் தமிழர்கள் படும் வேதனையை மையமாகக் கொண்டு இதன் கதை சித்தரிக்கப்பட்டுள்ளது. ஐந்து தமிழ் வீர இளைஞர்களின் சாகசச் செயல்கள் இதில் இடம்பெற இருக்கிறது. இப்படம் நேபாளம், பூட்டான், காங்டாக், டார்ஜிலிங் முதலிய பன் மலை பிரதேசங்களிலும், புத்த ஆலயங்களிலும், ராணுவக் கூடங்களிலும் வளர இருக்கிறது.

நட்சத்திர தேர்வு

(6-ம் பத்தி பார்க்க)



## கண்ணனின் கீதம் காதலின் வேதம்

ராயல் சினி ஆர்ட்ஸின் 'கொலுசு' படத் துவக்க விழா ஏவி.எம். ஆர்.ஆர். தியேட்டரில் பாடல் பதிவுடன் நடைபெற்றது.

''கண்ணா உன் கீதம்''
காதல் வேதம்

என தொடங்கும் பாடலை மலேசிய வாசுதேவன் இசையமைத்துப் பாடினார். உடன் பாடியவர் எஸ். பி. சைலஜா, விஜயகாந்த், நரேஷ் குமார், வி.கே.ராமசாமி, பூர்ணம் விஸ்வநாதன், கவுண்டமணி, ஜாஸ் மோகன், நளினி, பூர்ணிமாராவ், மனோரமா, அனுராதா ஆகியோர் நடிக்கிறார்கள். பாடல்களை வாலி, காமகோடியான் எழுத, ஒளிப்பதிவை ஏ. கே. பரமகுரு கவனிக்கிறார். கதை, வசனம், டைரக்ஷன், தயாரிப்பு கே. எஸ். மாதங்கன்.

(1-ம் பத்தி தொடர்ச்சி)

நடைபெற்று வரும் இதில் முன்னணி நட்சத்திரங்கள் பலர் நடிப்பார்கள் என்று தெரிகிறது.

விட்டல் படத்தொகுப்பையும், ஜுடோ ரத்தினம் சண்டைப் பயிற்சியையும், ரங்கா ஒளிப்பதிவையும், இளையராஜா இசையையும் கவனிக்கின்றனர்.

கதை. திரைக்கதை, வசனம் எழுதி ராஜசேகர் இயக்குகிறார்.



✻✻ மோகன் — சசிகலா
படம் :- இளமைகாலங்கள்